போன்ற இயக்கங்களுக்கும் மிகப் பெரிய பங்குண்டு * இந்த அடிப்படை அம்சத்தோடேயே, இந்தத் தேர்
தலில் கம்யூனிஸ்ட் கட்சியின் பின், நம்மாகாணத்து மக்களின் பெரும் பகுதி திரண்டுள்ளது என்ற அம்சம்
சேர்ந்துள்ளது. இதைத்தான் தேர்தல் முடிவுகள் பிரதிபலித்துள்ளன. கட்சிக்கு மட்டும் 62 ஸ்தானங்கள் கிடை
த்ததும், கட்சி ஆதரவாளர்களான சுயேச்சையாளர்களுக்கு சுமார் 15 ஸ்தானங்கள் கிடைத்ததும் இதைத்தான்
ஸ்தூலமாகப் பிரதிபலித்துள்ளது. * காங்கிரஸோடு ஏற்பட்டுள்ள அடிப்படை வெறுப்பும், ஜனநாயக சக்தி
கள் மேற்கூறியவாறு கட்சியால் திரட்டப்பட்டதும் சேர்ந்து, மற்ற கட்சிகள், நபர்கள், ஆகியோருடைய மனோ
பாவத்தில் பெரிய மாறுதலை உண்டுபண்ணுவதற்கான முக்கிய காரணங்கள். * இதன் விளைவாகவே,
தேர்தலில் நம்மைப் பல இடங்களில் எதிர்த்த, பாரா கட்சித் தலைவர்களும் இன்று நம்மோடு கூட்டணி ஏற்
படுத்த முன்வருகின்றனர். வந்துள்ளனர் * அதேபோன்று தமிழ்நாடு உழைப்பாளர் கட்சியும் முன்வந்தது *
மேற்கூறிய இரண்டு கட்சிகளும் இவ்வாறு கம்யூனிஸ்ட் கட்சியுடன் சேர்ந்து நடவடிக்கை எடுக்க முன்வந்தது.
சுயேச்சையாளர்களின் ஊசலாட்டத்தைக் குறைக்க பெருமளவு உதவியது *. இவ்வாறு கம்யூனிஸ்டுகளோடு மற்ற
ஜனநாயகவாதிகளையும் கொண்டதொரு கூட்டணி ஏற்படுவதானது காங்கிரஸ் தலைவர்களிடையே
பெரும் குழப்பத்தையும் உண்டுபண்ணுகிறது. இந்த ஐக்கிய முன்னணியை ஒரு கம்யூனிஸ்ட் பொம்மை என்று
கூறிப் புறக்கணிப்பது அவர்களால் முடியாது *. ஆகவே மக்களுடைய உணர்ச்சி, ஜனநாயகத்தின் பலங்கள்,
அதை மேலும் வளர்ப்பதற்கான வாய்ப்புகள், நம்மாகாணத்தில் இன்று ஏற்பட்டுள்ள நிலைமைகள் ஆகிய அனை
த்தையும் கொண்டு பார்க்கும்போது, ஜனநாயக கூட்டு மந்திரி சபை வேண்டுமென்ற கோஷம் உடனடியான
நடைமுறை கோஷமாகிறது * ஆனால் இது வெறும் காங்கிரஸ் எதிர்ப்பு கோஷம் மட்டுமல்ல. அப்படியாகவும்
கூடாது. அப்படி இருந்திருக்குமானால் அது அப்பட்டமான சந்தர்ப்பவாதமாகும். * இன்றைக்குள்ள வர்
க்க சக்திகளின் அணிவகுப்பு, வெகுஜன இயக்கத்தின் பலம், மக்களின் உணர்வு, ஆகியவைகளுக்கு ஏற்ப
உடனடியாக நிறைவேற்றப்பட வேண்டிய ஒரு திட்டத்தை அடிப்படையாகக் கொண்ட ஐக்கிய முன்னணி
ஏற்பட்டு அதன் சர்க்காரும் ஏற்பட்டால்தான் மேற்கூறிய விளைவுகள் ஏற்படும். * அதனால்தான் கட்சி இதற்
கான பேச்சு வார்த்தைகளிலும் சரி, சமீபத்தில் நடந்த எம்.எல்.ஏ.க்கள் மகாநாட்டிலும் சரி,
திட்டத்தைப் பற்றியே அழுத்தத்தையும் செலுத்தியது. * மேற்கூறியவகையில் ஐக்கிய ஜன
நாயக முன்னணி மந்திரி சபை ஏற்படுவதற்கான வாய்ப்புகள் இருக்கின்றன என்றாலும் பிற்
போக்கு சக்திகளின் பலத்தை நாம் குறைவாக மதிப்பிடக்கூடாது. ஆகவே, இந்த வாய்ப்புகள்
நடைமுறை சாத்தியமாக்கப்பட வேண்டுமானால், நாம் மேலும், மேலும், மக்களை இந்த திட்டத்தின்
அடிப்படையிலும், இந்த கோஷங்களுக்காதரவாகவும் திரட்டுவதையே பொறுத்திருக்கிறது.
கட்சிக்கு முன் இன்றுள்ள பெரிய இலக்கும், முக்கியமான இலக்கும் இதே. * இந்த இயக்கத்தில் மேலும்
மேலும் ஜனநாயக சக்திகளையும் ஸ்தாபனங்களையும், நபர்களையும், ஒன்றுபடுத்த நாம் பாடுபடுவது அவ்வியக்
இயக்கம், திட்டத்தை விளக்கி அதன் அடிப்படையில் நடத்தப்படும் இயக்கமாக இருத்தல் வேண்டும் *
பிற்போக்காளரின் எதிர்ப்பிரசாரத்திற்கும் பதிலளித்த, மக்களுடைய சந்தேகங்களை போக்கக்கூடிய
தாக இருக்கவேண்டும். இப்படிப்பட்ட இயக்கம் விரிவான அளவில் நடத்தப்படுவதானது, பிற்காலத்தில் கூட்டு
மந்திரி சபை ஏற்பட்டாலும், அது திட்டத்தை நிறைவேற்றுவதற்கான அஸ்திவாரத்தை நாட்டும். ஏனெனில்
நாட்டிலுள்ள பிற்போக்கு சக்திகளும், ஆங்கிலோ அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகளும் சகலவிதத்
திலும் இந்தத் திட்டம் நிறைவேற்றப்படாமலடிப்பதற்காகவும், ஜனநாயக இயக்கத்தை முறியடிப்பதற்
காகவும் போராடுவார்கள் என்பது உறுதி. * எனவே இப்படிப்பட்ட ஒரு சர்க்கார் ஜனநாயக சர்க்கா
ராக இருக்கவேண்டுமானால் அது ஒரு போராட்ட சர்க்காராகத்தான் இருக்கமுடியும். அதாவது பிற்
போக்கு சக்திகளை ஒவ்வொரு நிமிடமும் எதிர்த்துப் போராடும் சர்க்காராகத்தான் இருக்கமுடியும்.
அதை நடத்துவதற்கு மக்களின் சக்திதான் ஆதாரபலமெல்லாம். * மக்களுடைய சக்தி மேலும்
மேலும் திரட்டப்பட்டு, உள்நாட்டு பிற்போக்கு சக்திகளையும், ஆங்கிலோ-அமெரிக்க ஏகாதிபத்தியங்
களின் தலையீட்டையும் தகர்த்தெறியப்படுவது கட்சி ஸ்தாபனம், தொழிற் சங்கங்கள், விவசாய
சங்கங்கள், மற்றுமுள்ள ஜனநாயகப் பகுதிகளின் ஸ்தாபனங்கள் ஆகியவை பலம் பொருந்தியதாக
வளர்க்கப்பட்டு, ஜனநாயக இயக்கம் மேலும், மேலும் பலம் பெறுவது ஒன்றுதான் உத்தரவாதம் செய்ய
முடியும் * எனவே, உடனடியான இந்த மிகப் பெரிய முக்கியமான அரசியல் இயக்கம் நடத்தும் அதே சமயத்தில்
ஸ்தாபன இயக்கத்தையும், தொழிற் சங்கங்களையும், உழைப்பு பாசறைகளின் அடிப்படையில் வளர்ப்பது
அவசர அவசியமாகிவிட்டது. அரசியல் இயக்கம் வேறு, வெகுஜன ஸ்தாபனங்களை வளர்ப்பது வேறு என்று
தனித்தனியாக இந்த கடமைகளை பார்க்காமல் உடனடியாக இவ்விரண்டும் அவசர அவசியமான
கடமைகளாகும், கட்சி யூனிட்டுகளும், அங்கத்தினர்களும் அனைவரும் ஈடுபடுமாறு கோருகிறது. 27.2.52